கருகிய மேனி கண்டு கதிரவற் கெதிரே நின்று
மருகவென் மகன்மேற் காதல் விடுத்திட வந்த வாறு
தெரிதர வுரையா யென்றான் சிறிதே யிழிந்த சாதிக்
குரியவ னின்றோ டென்ன வுரைப்பதென் றுயிர்த்து ரைத்தான். ()

இயங்கிய கோப நீங்கி யிழிந்தயா னிலகி வாய்ந்த
வுயர்ந்தவர் தடமைச் சேரி னொழிந்திடுங் களங்க மென்று
சயம்பெறச் சொல்வ தோராய் போலுமென் றனைற டங்கண்
வயங்கிழை யுனது மாதை வருந்தியான் கேட்ட துண்டோ. (க0)

எழுந்திடு முயரம் பெண்ணை மூன்றதின் மேலி ருந்து
முழுந்துருள் பொழுதி னின்றன் கைவிர லாழி யூறுஞ்
செழும்புன னிழலிற் பார்த்துத் திகழ்தரு கணையா லெய்ய
விழுந்தவவ் வாழி கண்டு கொடுத்தனை வியந்து நின்றே. (கக)

ஆதலின் விலையாய்க் கொண்ட பொருளென வாயி னுணின்
பேதையென் றிகழ்ச்சி பேசி யிடுமது பொருது கண்ணின்
மீதழற் பொறிகள் சிந்த வெகுண்டுதன் சாணை வாயிற்
கோதுறக் கடைந்தான் மேனி யெழிலெல்லாங் குலைந்த தம்மா. (க௨)

என்செய்வான் பரிதி நின்பெண் ணெனக்கதி மோக மாகு
மன்புவைத் திடுவ னென்று னவ்வுரை செவியிற் கேட்டு
முன்புநான் முகன ளித்த முரண்மிகு சாணைச் சுற்றைத்
தன்கையா னிறுத்தி விட்டான் றரிக்கில னொந்து மீண்டான் (க௩)

வருந்திய துயரங் காந்தி மதியிரு கண்ணு னோக்கி
யருந்தவ மியற்றும் வானோர் குரவனை யடுத்து நின்று
முருந்துறழ் முத்த மூரற் குமுதவாய் முகம லர்ந்து
திருந்துவம் பங் கிளியின் வாய்ந்த திகழ்மொழி யொன்று ரைத்தாள்

முன்னரென் பிதாவுக் கென்னை யிகழ்ந்தது முழுதுஞ் சொன்னே
னன்னவன் கூர்மை வாய்ந்த சாணையி னகத்தி லுய்த்து
மன்னிய வொளிம ழுங்கக் கடைந்தனன் வருத்தந் தீர
வுன்னரு ளன்றி வேறொன் றுளதுகொ லிரவிக் கையா. (கரு)

என்னுநன் மொழிகேட் டாசா னிலகிய வயித்திய நாதர்
தன்னினீங் கிடுமென் றுன்றன் பாரியோ டெழுந்து தாதார்
பொன்னிதழ்க் கடுக்கை வேய்ந்த வயித்திய நாதன் பொற்றாள்
பன்முறை பணிந்து தீர்த்தம் படிந்தருச் சனைபு ரிந்தான். (கசு)

பொருந்திய கன்னி மாதம் புகழ்மிகு மாக மாதம்
வருந்திநாண் மூன்று செய்த பூசையின் வாய்மை தன்னைத்
திருந்துபே ரருள்ப டைத்த தேவநா யகன்ம கிழ்ந்தே
யருந்திற லெழிலு நல்கி யரியநல் வரமு மீந்தான். (கஎ)

இன்னருத் துளிப்ப லூதி விளரிவண் டெழுந்து பாடு
நன்மலர்க் குழலாள் காந்தி மதியுட னுள்க டோறு
மன்னுபே ரின்ப நல்கும் வயித்திய நாதன் பாதந்
தன்னையன் பொடுப ணிந்து தனதால கதனைச் சார்ந்தான். (கஅ)

மனமிறு மாந்து தோட்டா மஃதொரு ஞான்று வாய்ந்த
தினகரன் பாரி சாயா தேவியா சனத்தி ருப்பத்
தன்றுளங் கொதித்தே யன்று டனித்திருந் ததுவுந் தீர்த்து
வினவிநல் லுரிமை செய்து விளங்கினன் விண்ணின் மீதில். (க௯)

வேறு.

கறைவிளங் கியமணி மிடற்றுக் கண்ணுத
லிறைவனுக் கிரவிநாண் மலரெ டுத்துகற்

ருறைவழா தருச்சனை செய்தல் சொல்லினன்
மறையருச் சனைசெய்த வண்மை சொலவன்மேல். (உ0)

ஆதித்தனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ககசு.

---

## வேதமருச்சனைசெய்சருக்கம்.

இலகு சோமக னென்றுரை பெற்றிடு
மலகி லாற்ற லுடையவ னுய்ந்தபொன்
னுலகில் வாழிமை யோர்துய ருற்றிடத்
திலகு மாண்மறை சேர வெடுத்தனன். (க)

வஞ்ச னைசெய் தெடுத்தபின் மாகட
னஞ்சு போலொளிர் சேற்றி னடுவினி
லஞ்சி யேக்கமு றப்புதைத் தானயர்ந்
தெஞ்சி வானவர் யாவும் விடுத்தனர். (உ)

அரவ ணிந்திடு மையனை யன்னவர்
பரவித் தோத்திரஞ் செய்தனர் பைந்துழாய்
விரவு மார்பன்ற னைவியன் கங்கைதன்
சிரம ணிந்தவன் சிந்தனை செய்தனன். (ங)

வைய முண்டிடு மாயவன் பாய்விடை
யையன தன்னை நினைந்த துணர்ந்துடல்
செய்யுஞ் செங்கண் மகரம தாகியே
வெய்ய சோமகன் வீமப் பொருதனன். (ச)

குருதி சோர விழுந்தபின் கூறருஞ்
சுருதி தேடி யெடுத்துச் சுரந்தருள்
பெருகு காதலிற் பேதுற வீக்கியே
திருவி ளையகன் செவ்விபெ றச்செய்தான். (ரு)

மறைக ளுன்கும் வயித்திய நாதன்ற
னறைம லர்ப்பதம் போற்றி நவினுநன்
முறைமை யாக முதிர்ந்திடு மன்பினு
னிறையும் பூசைசெய் நேசம தென்சொல்வேன். (சா)

ஏல வாச வெழிற்றிரு மஞ்சனங்
காலந் தோறுங் கனிந்தபி டேகஞ்செய்
தால முண்டிடு மையனுக் கற்புதச்
சாலி யன்ன நிவேதனந் தானல்கி. (எ)

மற்று முள்ள வகையுப சாரமு
நற்றி றம்பெறச் செய்தெழி னல்வரம்
பெற்ற மூர்த்த பிரான்றரப் பெற்றதால்
வெற்றி வேத புரியென்பர் மேன்மையோர். (அ)

வேறு.

நாதனை நறுமல ரான யந்துநால்
வேதம்வந் தருச்சனை புரியு மேன்மைசே
ரோதருஞ் சருக்கமீண் டெடுத்து ரைத்தனன்
பூதலம் வருகுசன் புகழ்ச்சி மேற்சொல்வேன். (கூ)

வேதமருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கஉரு.

# அங்காரகனருச்சனைசெய்சருக்கம்.

பொற்புறுந் தவஞ்சூழ் சூதமா முனிவன் புகழ்மிகு நைமிசா ரணிய, வற்புத முனிவ ரகமகிழ்கூர வங்கையுமங் காரகன் மகிமை நற்றிறம் பெறவே யுரைத்தன்மே யினன்மே னவிலருங் காதனைய மரச், சொற்சுவை யினிய பொருட்சுவை யுணர்ந்தோர் துதித்தனர் குவித்தகை யெடுத்தே. (க)

தயங்குபூ ருவத்தி னன்னெறி முதிர்ச்சி தருமிரா தந்திர மென் று, நயம்பெறு கற்பந் தனிறபனி வரைசூழ் நலன்மிகு தாழ்வரை யதனிற, பயன்றர வுமைதன் னுடன்மகிழ் கூர்ந்து பரிவுறு திருவிளை யாடல், வியன்பெறச் செய்யும் விழைவின னாகி விமலன்வெய் யோ னைநோக் கினனே. (உ)

அங்கியங் கடவு ணடுவினின் றரிய தவம்புரிந் திடுமவர் போ ன்று, வெங்கதி ரவன்றன் வெயிலகொதித் திடுமவ் வேலையின் விழி த்துமே னோக்கி, யெங்கணு யகன்வீற திருந்தனன் முகத்தி னெழு ந்தவேர்த் திடுந்துளி யொன்று, பொங்குமாழ் கடலின் வடவைவான் கனல்போற் புவிதனில் விழுந்தது மாதோ. (ந)

உத்தம மான நிலமகள் வாய்ந்த வுபநிட வாக்கிய மதனுன் மத்தநாண் மலர்சேர் வள்ளலைத் துதித்தென் வருத்தம தறியகே றுளரோ, வத்தனே தாங்கற் கரியதாய்த் தாபாக் கினியதி குரூரமா யடர்ந்த, தெத்துணை கொண்டு தீருவே னிரட்சி யிரட்சியென் றிரங் கினின் றனளே. (ச)

இவ்வகை புவிமா துரைத்தலு மினிநீ யிரங்குத றவிரெனப் புக ன்று, ஏவவிசே ரண்ண னவிலுமப் பொழுதி னல்லெழில் சிவர்ச

வண் ணமதாய்ச், செவ்விதாய்க் கருமை தீர்ந்திடு மூன்றி நிறமுடைத் திகழ்கதி ரவன்போற், கவ்வைநீர்க் கடல்சூழ் புவியினின் றெழுந்து கறைமிடற் றண்ணலைப் பணிந்தான். (ரு)

மாந்தளிர மேனி மையனவன் னவனை மகிழ்ந்துவாய்ந் திருந்திடு குருரஞ், சாந்தநீ செய்து புவிக்கனு கூலந் தனைப்புரி தாங்குமங் களமுண், டார்தகு முபய காவிரி யதனுக் கமைந்திடு நாப்பண்வாரா கடலிற, சேய்ந்தமேற் றிசையின் வயித்திய நாத மெனுந்தல மியல்பெற விளங்கும். (சு)

பூசுரர் மனையி னித்தியாக் கினிசெய் புகைநறு மணங்கமழ்ந் திலகுந், தேசுநல் கிடுமப் புண்ணிய தலத்தைத் தெரிசனஞ் செய்து வக் கணத்தி, னேசமுற் றுளத்தி னினைந்தன யாவு மில்லையா யளிக்குமென் றுரைத்தான், பேசரு மகிழ்ச்சி கூர்ந்துதென் றிசையைப் பெட்புமீ தூரநோக் கினனே. (எ)

எண்ணரி தாகி யிருந்திடுந் தலங்கள் யாவையு மினிதுற வணங்கிப், புண்ணிய கங்கை நதியினீ ராடிப் புதுமல ரால்விசு வேசன், வண்மைசேர் பாதாம் புயந்தனி லிலகு மகிழ்ச்சிகூர்ந் தருச்சனை புரிந்து, தண்ணளி முரல்பூந் தருவளர் வயித்திய நாதமா நகர்தனைச் சார்ந்தான். (அ)

தீந்தரு வினைநோ யொழிந்திட விளங்கித் திகழ்ந்தசித் தாமுத தீர்த்தந், தோய்ந்துநன் னிறப்பட் டிடைதரித் திருந்து தூயநீ றணிந்திழை யினிதா, வாய்ந்தமுப் புரிநூ லணிந்திடு மார்பின் மன்னுமுத் தரீயன் றசைய, வாய்ந்துசெ ருருத்தி ராக்கன் மாலை யற்புத வொளிசெயப் புனைந்தான் (கூ)

கனிவுட னெழுந்து சிந்தூர முகக்கற் பகவிநா யகன்றனை வணங்கிப், பனிமதி யணிந்த வயித்திய நாதன் பதாம்புயங் கண்டுகண் களித்தே, புனிதமஞ் சனம்பஞ் சாமுதம் பஞ்ச கௌவியம் பூங்கனி யினொ, டினியநல் லபிடே கந்தனக் கமைந்த திரவியம் யாவையு மெடுத்தே. (க0)

அளப்பருங் காத லுடனபி டேகஞ் செய்துநல் லாடையா பரணம், வளந்தொடு சாந்தி நிவேதன மளித்து மந்திர விதிமுறை வழாது, விளக்கிய தூப தீபமுங் கொடுத்து மேதகு சகத்திர நாம, மிளக்கமுற் றிடுகூ விளங்கரத் தேந்தி யினிதருச் சனைபுரிந் தனனே. (கக)

திவ்விய மான வன்னநெய் யொழுகித் திகழ்ந்திடு மபூபக் கனிமற், றிவ்வகை யனேக விதநிவே தனமற் றினிமைபெற் றிடநித மளித்து, நவ்விசே ரன்ன றனைப்பணிந் தெழுந்து நலம்பெறு துதிபல செய்தான், கவ்வைசூழ் கடலின் விடநுக ரமலன் கண்ணின்முன் னெழுந்தரு ளினனே. (கஉ)

பூமக ளினிய புதல்வநின் றனக்குப் பொற்புற வேண்டிய வரங்க, ளேமமெய் திடயாந் தருகுவங் கேளென் றிசைத்தன னண்ணலே நினது, தாமரை மலர்பொற் றுளினை நினையுஞ் சிந்தைதந் தருள்புவி தனின்மே, லாமணி பெறுநற் கிரகநின் றங்க மாகுமா திக்கநல் கென்றான். (கங)

அன்னது மன்றி வேண்டின னினிய தலந்தனின் மாதமீ ராறின், மன்னிய செவ்வாய்க் கிழமையி லினிய மகேசுர பூசைபண் ணினோர்தா நன்மைசேர் சகல பாக்கியம் படைத்து நலம்பெறு புத

ல்லுனைப் பெற்றுப், பின்னர்வெண் கயிலை சேர்ந்துபே ரின்பம் பெ
றும்வர நல்குநல் கெனவே. (கச)

வேறு.

அங்கா ரகன்வேண் டியவரங்க ளனைத்து மளித்தே பெருங்கரு
ணை, யெங்கோன் விளங்கி யிருந்தனன்மற றெழில்சேர் சித்தா முத
லடபாற, செங்கோ கனக முகமலர்தென் றிசையை நோக்கி யிட
வுறைந்து, கொங்கார் மலரா னிதம்பூசை புரிந்து மகிழ்ச்சி கூர்ந்
தனனே. (கரு)

இன்னேன் புகழ்சேர் மான்மியமற றின்ன மொன்று பகர்வ
னெனப், பனனூன் முறைகண் முழுதுணர்ந்து பதினெண் புராணங்
கரைகண்ட, தன்னே ரரிய சூதமுனி வரன்சூழ் நைமி சாரணிய,
நன்மா முனிவா செவிக்கினிய வமுத மொழியா னவில்கின்றான். ()

வேறு.

இலகிய சுவேதவிந் தெழுந்த தெம்பிரான்
மலர்முகந் தனிலொரு கறபம் வன்மைசேர்
நிலமிசை விழுந்திட நிமலன் செய்தன
னலர்குச னுதிரமே னியினு தித்தனன். (கஎ)

நமிங்கினர் வானவர் நாதன் பார்த்தவன்
கொடுந்தழ லுருவினி லுதிரங் கூருவ
தொடுங்கிடச் செய்குவ னென்று ரைத்துமே
லடுந்திறற் குசன்கருத் தனையக் கூறினான். (கஅ)

மங்கள வாரநின் மகிமை யிவ்வுல
கெங்குளோர் களுந்துதித் தேத்த நல்கினேன்
செங்கைகூப் பினர்க்குநின் குரூரந் தீர்த்துநீ
பொங்கிய புகழொடு பொலிக வென்றனன். (கக)

வேறு.

எண்ணருந் துயரங் கூர விருந்தசெங் குட்டந் தன்னாற்
கண்ணினு லொருவர் பாரார் கடல்விட முண்ட கண்ட
வண்ணலே நின்னையன்றி யடியனேற் காணு முண்டோ
நண்ணுமிக் குட்டந் தீர நல்வழி யருள்செய் யென்றான். (௨0)

மங்கள வுருவ மான வயித்திய நாதஞ் சேர்ந்து
பங்குனிச் செவ்வாய் தன்னிற் பரந்திடு மமுத மென்னும்
பொங்குறும் புனலின் மூழ்கிப் புராதனன் வயித்திய நாதன்
பங்கயச் சரணங் கண்டு பணிந்திடிற் றீரு மென்றான். (௨௧)

ஆறணி யண்ண லோது மனைத்தையு முணர்ந்து மேலாம்
பேறரு டலத்தைச் சார்ந்து பிறங்கிடு மகிமை கண்டு
கூறரும் வீர பத்திரக் குரிசிலை வணங்கி மற்றும்
வேறுவே றிறைஞ்சிச் சித்தா முதப்புனல் விதியாற் றோய்ந்தான். ()

வண்மைசேர் மாசி மாதப் பிறப்பினிற் றீர்த்த மூழ்கித்
திண்ணிய படிமேலேறும் பொழுதினிற் குட்டந் தீர்ந்தே
யெண்ணரும் பசும்பொன் மேனி யெய்தினன் குசன்பின் வாய்ந்த
புண்ணியக் கவச மொன்று புகன்றய ரீசா னத்தின். (௨௩)

ஓடையொன் றியற்றித் தூய வொளிசெய்செங் கழுநீர் வைத்துக்
கோடைஞான் றினுநீங் காது குளிர்மணங் கமழும் பூவா
லாடைவெம் புலித்தோல் பூண்ட வண்ணலுக் கேற்கும் வண்ண
நாடியே சாத்தி நின்று நலம்பெறத் துதிக்க லுற்றான். (௨௪)

கமலநான் முகனுங் காணாக் கண்ணுதற் பிரானே போற்றி
யமலனே போற்றி யெங்க ளையனே போற்றி நீங்காத்
தமலம தொழிப்போர்க் கென்றுந் தயைபுரி பரனே போற்றி
துமலறீர்த் துயிர்க்குத் தோன்றாத் துணையதா யிருந்தாய் போற்றி.

துமலல் - தும் அல்லல்; தும் - துகள்.

சுருதிதே டரிய நாதா தூயனே போற்றி யென்றே
வருதுதி பலவுஞ்செய்து வள்ளல்பூங் கோயில் வாய்ந்த
நிருதிதென் றிசையிற் சித்தா முதநிறை வடபா லிங்கா
தருகுதென் முகம தாக வமர்ந்தினி திருந்தான் பன்னாள். (உக)

வேறு.

திறஞ்சே ரினிய செபந்தவஞ்செய் திலதர்ப் பணநெய் யாகுதி
செந், நிறஞ்சே ரங்கா ரகன்றன்னை நினைந்தே யளியா தவர்க்கம்மா,
விறந்தே யிடுமப் பலனதனு வினைய தலத்தி னியல்பெறுநம், லறஞ்
சேர்ந் திருந்தோர் மற்றெவர்வந் தவர்க ளெவர்க்கு மஃதாமால். ()

அண்ணல் வரம்பெற் றினிதுறையு மங்கா ரகனுக் கிப்புலனென்[யிடு
றெண்ணியளிப்போர்க் கெண்ணருநல் லெழினமங் களம்வந் தெய்தி
நண்ணும் புகழ்பொன் னவமணியுங் கொழிக்கு மன்றோ னன்மகிழ்ச்
பண்ணு மதனா லவர்நினைவின் படியே யனைத்தும் பலித்திடுமே. [சி

வேறு.

அற்புத மிகவங் காரகன் பூசை செய்திடுஞ் சருக்கம்யா னறி
ந்த, நற்பெரு மகிமை யுரைதரன னிதன்மே னுதனைக் கலைமதி விதி
யாற், பற்பல மலர்கொண் டருச்சனை புரிந்து பணிந்துவாய்ந் திடுது
தி புகன்ற, பொற்புறு சருக்க மான்மிய மதனைப் பூவிக்கிதம் பெறப்
புக லுவனே (உகூ)

அங்காரகனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆடி திருவிருத்தம்-கூ௱ச.

## சந்திரனருச்சனைசெய்சருக்கம

எணலிலா மகிமை பெற்ற தக்கனுக் கிருபத் தேழு
பெண்ணெழில் கொழிக்க வந்து பிறந்தன ரனையர் தம்மை

விண்ணின்மீ தியங்குந் தூய வெண்மதிக் களித்தா னன்றான்
கண்மணி யெனவி ளங்கு ரோகிணிக் கன்பு செய்தான். (௧)

ஏனையர் துயரங் கூர்ந்தே யிருந்தனர் சின்னாள் பின்னர்
வானின்வெண் ணிலவு காலு மதியினை நீங்கி வந்து
தேனினு மினிமை வாய்ந்து திகழ்ந்திடு சொல்லாற் றந்தை
தானிதம் பெறவே கேட்பச் சாலவு முரைத்தா ரந்தோ. (௨)

பொன்னிளங் கொம்பு போன்ற புதல்வியர் நடந்த யாவு
முன்னர்நின் றுரைத்த போது முதிர்ந்திடு சினத்த னாகி
வெந்நெருப் பெனவே கண்கள் சிவந்திட விண்ணின் வாழு
மன்னவன் றனைச்ச பித்தா னடுத்தது கயநோய் வந்தே. (௩)

குமுதவாய் விள்ள வெள்ளை நிலவுகொப் பளிக்குந் தூய
வமுதமே னியிற்க ளங்க மடுத்தது கண்டு பார்மே
னமதுநோய் நலிவு தீரு மெத்தலத் தென்று னைந்தே
தமதுநே ரரிதாய் மன்னும் வயித்திய நாதஞ் சார்ந்தான். (௪)

எய்தரு மகிமை பெற்றே யிருந்திடுந் தீர்த்த மூழ்கி
வைதிக விதிவ ழாது சந்திவந் தனஞ்செய் தாய்ந்த
துய்யநீ றணிந்து தூய கண்டிகை தரித்துத் துத்திப்
பையர வணிந்த நாதன் பதமலர் பணிந்து போற்றி. (௫)

வேறு.

பூசைக் கமைந்த மஞ்சனமும் புதுமா மலரு நறுஞ்சாந்துந்
தேசிற் பொலிந்த தீபமுஞ்செஞ் சாலி யினிய திருவமுது
மீசற் கேய்ந்த பரிசினு லமைத்தே யிளகி யுருகுமன
நேசத் துடனே பூசைவிதி நியம மாக நிதஞ்செய்தான். (௬)

அப்ப னவன்முன் னெழுந்தருளி யடுத்த சாபந் தனைநீங்க
செய்து திகழ்பூ ருவபக்கந் தன்னிற்கலைகள் செழித்தோங்க
வெய்து மபர பக்கமதி லிறங்கப பருவந் தனிலிலகித
துய்ய கலையீ ரெட்டுநிறை ந துலகு துதிசெய் திடவளித்தான். (எ)

பெண்ணிற் கனமந்த கற்பினரர்ப் பெருகு மெழில்வாய்ந் திடுமினிய
வொண்ணித் திலநன் னகைமாத ரிருபத் தேழு பேருளா
நண்ணப் பனிமா மதிவாய்ந்த நலஞ்சேர் போகந் தனைநுகரச்
கண்ணெற் றியினிற் படைத்தமணி கண்ட னருள்செய் தனனம்மா.

மருந்தாம் வயித்திய நாதனுமாம் வள்ளல் கலைமா மதிக்கருள்கூர்ந
திருந்தே வரநல கினனவலஞ்செய தினிய துதிபற பலசெய்து
திருந்து முலகு தனைச்சேர்ந்து செந்தா மரைவாண் முகமலர்ந்து
பொருந்து மனைவி யனைவர்களும் புகழ்சே ருரிமை பெறச்செய்தான்

வேறு

குளிர்தரு மமுத கிரணமா மதியின் கொள்கைமான் மியந் தனை யெடுத்துத், தெளிசுரா வுரைசெய தனனிரன் மேற்செங் கதிரவன் மண்டலத தினிற்போந், தொளிபெற வருவ னென்றெழுந் துயர்ந்து பரந்துவீழ் சடாயுவி னூடுசீ, ரளிதரு மன்பர் முகமலர்ந் திலகு மகமகிழ் கூர்தரப் பகர்வேன். (௧௦)

சந்திரனருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூ௬௪.

## சடாயுவருச்சனைசெய்சருக்கம்

திருந்திய நான்முக னளித்த செவ்விசேர்
பெருந்தவ நாரத முனிவன் பேசரு

மரும்பகை கடிந்திடு மம்ம ரீடன்வந்
திருந்தபே ரவைமகிழ் கூர வெய்தினான். (க)

பொன்முடி தரித்தர சுரிமை பூண்டிடு
மன்னவ னருக்கியங் கொடுத்து வந்தனை
நன்னெறி பெற்றிடச் செய்துன் னல்வர
வென்னவெங் குலஞ்செயுந் தவமென் றேத்தினான். (உ)

இகல்புரி யைம்புலப் பகைக டிந்திடு
மகதியாழ் முனிவரன் மன்னன் வாய்மையும்
புகன்மொழிப் பரிவையும் பூரித் தன்னவ
னகமகிழ் தரப்பல வாசி கூறினான். (௩)

தரணியோர் குடைநிழ றனிற்பு ரந்திடும்
புரவல னிகபரப் பேறு பொற்புற
நரர்சுரர் தமக்கெலா நல்கு நற்றலந்
திரமுற னவயனே யருள்செய் யென்றனன். (௪)

பூவிரித தோங்குபூம் பொழின்மி குந்திடுங்
காவிரி வடகரை தனிற்கண் டோர்கள்கண்
மேவரி தாம்மகிழ் கூர்வர் விண்ணவர்
யாவரும் புண்ணியத் தலமென் றேத்துவார். (௫)

சித்தரன் மகிழ்பெறச் செய்யுஞ் செவ்விசேர்
முத்திமா நகர்தனிற் சடாயு முக்கினைக்
கொத்துவாய்ந் திருந்தகூ விளமெ டுத்துளம்
பத்திகூர் சிவார்ச்சனை பண்ணும் வாய்மையால். (௬)

தாரணி சடாயுமா நகர மென்றுதான்
பேரணி பெறவுரைத் திடுமெ னப்பெரு
காரண முணர்ந்தநா ரதவ ருந்தவன்
சீரணி வேந்தனுக் களித்தல் செய்தனன். (ஏ)

மன்னவ னெழின்முனி வரனை நோக்கியித்
தன்மைசேர் சடாயுவின் றந்தை யாவன்மே
னன்மையாங் குலவரன் முறைமை யாதெனப்
பன்னரு நன்மொழி பரிந்து கூறினன். (அ)

தக்கனற் புதல்வியாம் வினதை தன்னையெண்
டிக்கெலாம் புகழ்படைத் திலகு காசிபன்
மிக்கநன் மனைவியாய்க் கொடுத்த னன்மிகு
பக்குவ வணங்கரு ணனைப்ப யந்தனள். (கூ)

பின்னர்நற் கருடனைப் பெற்றெ டுத்தனள்
முன்னவன் மூதறி வுள்ள சேணியை
நன்மணம் புணர்ந்தன னலமி குந்திடு
மன்னவ ளிருபுதல் வனைய ளித்தனள். (க0)

தகுதிவாய்ந் திலகுசம் பாதி யென்பவன்
மிகுதிறம் படைத்துமுன் பிறந்த மேன்மையான்
புகழ்பெறு சடாயுவென் றுலகம் போற்றிடு
மகிமையா னவன்றனக் கிளைய வள்ளலே. (கக)

சூழ்தரு மிவர்சொலற் கரிய நண்புடன்
வாழ்பெரு நாளினிற் கயிலை மால்வரைத்
தாழ்தடஞ் சாரலின் றேறி னார்தடத்
தாழ்கட லெனக்கிளர்ந் தார்க ளங்குளார். (கஉ

பையவெய் தவர்தமைப் பார்த்தி யாங்களிப்
பொய்மயக் குறுபிறப் பொழிக்க வெண்ணினேந்
தெய்வசா யகன்றரி சனஞ்செய் வோர்களைச்
சைவரா யிருந்துநீர் தமித்த வீதியோ. (௧௩)

என்றபின் வாசலி னிருந்த யாவரும்
வன்றிறற் கழுகினுக் கிலகு ஞானம்வந்
தொன்றியே புண்ணிய பாவ வுண்மையை
நன்றுணர்ந் தறியுமோ வெனநகைத்தனர். (௧௪)

கன்மம்விட் டிருந்திடுங் கழுகி னுக்கரு
னன்மைசேர் ஞானநல் குவதுண் டாங்கொலோ
வென்னுபுன் மதியென விகழ்ச்சி கூறியே
யன்னவர் போவெனப் புகன்ற கற்றினர். (௧௫)

பத்திகூர் தரவவர் தமைப்ப ணிந்துநன்
முத்திசேர் நெறிதனை மொழியு மென்றிரந்
தெத்தனை யோதுதி செய்த தெண்ணரி
தத்தனை நெறியுணர்ந் தளித்தன் மேயினர். (௧௬)

வேறு

புகழ்பெற நிதஞ்செய் கன்மநன் கியற்றிப் புகலுதற் கரும்பிர வஞ்சந், திகழ்சிவாக் கினையா னடப்பதென் றெண்ணு மவன்சிவ ஞானியா குவன்மே, னிகழ்தரு மயன்ற னுளத்தினன் னெறிசேர் நிட்டைநீ விவேகமில் பறவை, யிகழ்தரக் கடவ தலதுனை யினை யோ னுடன்புக விடேமென விசைத்தார். (௧௭)

அய்யனு னினையைச் செலுத்தும் மலர்க ளறிந்திட வமர்ந்து சம் பாதி, நொய்யதாம் பட்சி சாதியா னுவலும் வேதநன் னெறி தனைக் கேண்மின், வைதிக மறையோர் தமக்குமெய்ஞ் ஞானம

வரும்வழிச் சிவார்ச்சனைப் பலனுஞ், செய்யவே லரசர்க் கந்தணர் தமைச்சே விப்பது ஞானசா தகமாம். (கஅ)

ஒழிந்திடும் வணிகர்க் கந்தண ரரசு ரொளிர்மலர்ப் பாதசே வையினுன், மொழிந்திட வரிய ஞானசா தகமா முறைமையி னுதித் தருத் திரர்க்குச், செழுந்திரு ஞான சாதக மூவர் சேவையி னல்வரு முனிவர்க், கெழுந்துசெய் யரிய தவத்தினுன் ஞான மெய்திடுஞ் சா தக மாகும். (கக)

நலன்கொள்கந் தருவர்க் கின்னிசைப் பாடல் ஞானசா தகம தாஞ் சித்தர்க், கிலங்குநன் மவுனங் கின்னரர்க் கெழில்வாய்ந் திருந் தபூ மாலைகட் டிதனற், பலன்பெறும் வித்தியா தரர்க்குவாத் தியங் கள் பகுத்திசை பெறவடித் திடுத, னிலம்புக ழினைய வேயிவர்க் கெ ன்று நிலைமையாம் ஞானசா தகமாம். (உ0)

பொருந்திடும் பட்சி சாதிமே லெழுந்து பொற்புறச் சாய்ந்து தாழ்ந் துயர்ந்து, திருந்தும்விண் மீதில் வட்டமிட் டேறிச் செல்வது தெய்வமா யகற்கும், வரும்பெரு மகிழ்ச்சி கூர்தரச் செய்யு மாத லான் ஞானசா தகமா, மரும்புக ழிலகு மவரவர் சாதி தருமமே யனைவரும் விழைவார். (உக)

என்றுநின் றுரைப்ப விருந்திடு மவர்க ளெழுந்துநீ பறந்திடும் வேக, நன்றுணர்ந் தறியக் காட்டிய பின்னர் நாதனைத் தரிசனஞ் செ ய்ய, வென்றிகூழ் விடையாந் தருகுவ மென்று மேலுமொன் றுரை த்தனர் பானு, வன்றிற லிலகு மண்டலம் புகுந்து வருமள வென வகுத் தம்மா. (உஉ

வியந்துநீ யெழுந்தே யிளையவ னுடனே செல்லுதி வலிமையை விட்டுப், பயந்துவீழ்ந் திடின்மேற் செய்வதென் னென்முர் பரிந்து செய் விரதம்விட் டிடிவோ, னயந்தரு புராண னுடனஞ்செய் ே

னண்ணிடு நரகம்யான் புகுவன், றுயர்ந்திடும் பாவ மெய்திடக் கடவீ னென்றுற நியையரைத் தனனே. (உ௩)

தரித்திடுஞ் சபதஞ் கூறியே தரையைத் தன்னெழின் மூக்கினூற் றீறி, விரித்துவன் சிறகை யுளர்ந்திரு வுருஞ்சூழ் வேகமாய்ப் பறந்த னர் கதிரோ, னெரித்திடுங் கிரணந் தாங்கரி தாகி யிளையவ னிலகிய கந்த, புரிச்சர கண்ட வனத்தின்மந் திரப்பொற் குண்டமேற் புகழ் பெற விழுந்தான். (உ௪)

வன்றிறன் மகிமை சிற்சில வாகத் தாழ்ந்திட வருந்திமே லெழுந்தே, யொன்றரை முகூர்த்தந் தன்னிலா காய வெளிகடந் தோடி மேற் பானு, தன்றழ லொழுகு மண்டல மணித்தாய் நெருங்குமவ் வளவையிற் றழைந்து, வென்றிசூழ் சிறகு வெந்துசம் பாதி விந்திய வரைதனில் விழுந்தான். (உ௫)

வேறு.

மணிமந் திரவவு டதகுண் டமு * மிளை யவள்வண் புகழமு தமதாக, வணதண் புனலொளிர் தடமும் பிறையர வணியும் பரனையு மிமவான்றன், கனிதம் பெறுதவ மதின்வந் திடுமுறை தனையும் வளர்முரு கனையுஞ்சூர்,தணியுந் தெளிவுறு பொழுதின் னறிகுத றருமின் பழமிக வுளதாக. (உ௬)

கண்டபின் குண்டந் தனிற்றின மூன்றிற் கவினுறு படிவம்வாய்ந் தெழுந்தே, தண்டகா ரணிய மிதுவென வுணர்ந்து தமனிய வுலகினி லுலாறயு. மண்டர்போற் றிடுநல் வயித்திய நாத வண்ணலை யருச்சனை புரியு, கண்டகோ தலினூற் றீர்த்தநீ ராடி வந்துமூ வலஞ்செய்து பணிந்தான். (உ௭)

---

* இளையவள் - வாலாம்பிகை.

அதிகமா மகிமை பெறுரூப சார நிறையவே தாகம முரைத்த
விதிமுறை வழாது விருச்சிக மாத மேவுபிற் பக்கவட் டமிநாட்
கதிபெறப் பூசை செய்தருள் பெற்றுக் கவின்பெறு தண்டகா ரணிய
மு(ற்)றிர்கனி யருந்திச் சஞ்சரித் தின்ப முற்றினி திருந்தனன் மன்றே.

அத்தரு புகழ்கூழ் தண்டகா ரணிய மதுதனிற் றசரத னெழில்
சே, ருத்தம மான மந்திரத் தலைவ ருடன்பதா திகள்புடை சூழ,
முத்தவெண் குடைநீ ழலிற்சிலை வளைத்து முதிர்சின விலங்கினம் வெ
ருவப், பத்திவாய்ந் திருந்த பெருவலை கட்டிப் பலவிதீ வேட்டை
தான் செய்தான். (௨௯)

விரிசுடர் வெயிலின் வெப்பமீ தூர வுண்ணுநீர் வேட்கையால்
வருந்திப், பரிசன முழுதுஞ் சோர்ந்திடப் பராரை விருக்கநீ ழலிற்
றுயின் றனன்பாங், கரியபுற் றினைக்கா லாலுதைத் தனனு லரவு
கண் சிவந்திட வெழுந்து, புரிசினங் கொண்டு வருவது கண்டு பொ
ருப்புவிட் டெழுந்தனன் சடாயு. (௩௦)

திரண்டகூர் வாய்ந்த மூக்கினு லரவு திண்டுமுன் கொத்திமே
லெழுந்தி, யிரண்டுதுண் டமதாய்க் கடித்தெறிந் தனனவ் வேலையி
லரன்றெழுந் தரசன், முரண்டரு காலன் பிடிக்கவந் திருந்தா னெ
ன்றடு கணையெடுத் தனன்முட், புரண்டிடச் சடாயு விரைந்தான்
மொழியாற் புகன்றன னடந்தன யாவும். (௩௧)

உரைத்தபி னினிய கனியளித் தெழுந்தே யுண்ணுநீ ரெடுத்து
யான் வருவன், வரைப்புய மன்ன நின்களை தீரப் பருகிநீ வாழுமூ
தூரைத், திரைக்கடல் போலுந் தானைகள் சூழச் செல்லினித் தமை
யனுங் காத, லுரைக்கணப் பொழுது மறந்திடா திருக்க வருள்புரி
யென்றுபோற் றினனே. (௩௨)

குலமுறை மையுந்தான் வந்திடும் வரவுங் கூறினன் மகிழ்ச்சி கூர்ந் தரச, னிலகிய வெழில்சேர் மார்புறப் புல்லி யினியதீங் கனி புன லருந்திப், பலதுதி புகன்று சடாயுவை மறவாப் பரிவொடு தன் னக ரணைந்தா, னலமிகு மனைய சடாயுவவ் வனத்தி னுட்பல வுறை ந்துசஞ் சரித்தான். (கூக)

வேறு.

உளத்தினில்வாய்ந் தருகியபே ரன்பாற் கங்கை யொளிர்புனற் கோ தாவரிநீ ராடி யுண்மை, விளக்கியரும் பலனளிக்க மேவும் பொ ன்னி வெள்ளநீர் தோய்ந்துசிறை விரித்து ளர்ந்து, வளத்தினோங் முனிவரர்கள் வாசஞ் செய்யு மகிமையினை யினையதெனை வகுத்தி யார்க்கு மளப்பரிய தண்டகா ரணியந் தன்னி லம்பதினு யிரம்வ ருட மிருந்தா னம்மா. (கூச)

இனையநலந் தருவனத்தி லிராமன் சீதை யிலக்குமணன் மூவ ரும்வந் தனரி லங்கு, மனையர்தமை முனிவரர்க ளாசி கூறி யாச்சிர மந் தொறுந்துதித்தா ரிலங்கை யாளும், வினைகழல்கு றிராவணன்மா ரீசன் கூட வரவிரத மேறியவர் வாசஞ் செய்யு, நினைவரிய மகிமை நிறை தானப் பாங்கர் நீடுபெருந் தேர்நிறுத்தி நின்று பார்த்தான். ()

செஞ்சொல்விடு மாரீசன் சீதை கண்முன் சிறந்தபொன்மான் வடிவெடுத்துத் திகழ நின்றான், கஞ்சமலர்த் திருவனையாள் காதல் கூர்ந்து கணவனுடன் பிடித்துவரப் புகன்றாள் கையில், வெஞ்சிலையு மடுகணையு மெடுத்து நீங்கா விருப்பமுறு மிலக்குமணன் றன்னை மே வும், வஞ்சியிடைச் சீதைதனைப் பாது காத்து வைத்துநில்லென் றெ மூர்ந்துவரு மான்பின் போந்தான். (கூசு)

அகப்படும்பான் மையதாகி யனேகந் தூர மகன்றபின்வெங் கணைதொடுத்தா னுசி தாவென், றிகத்தினொடு பரத்தினையு மளிக்கும்

வாய்மை யிராமன்வாக் கதுபோலக் கூப்பிட் டெய்த, மிகப்பெரிய கணையுடனே வீழ்ந்த தந்த வெய்யகுரற் சீதைசெவி மேவும் போதிற், றிகைத்துமிகப் பயந்துசேல் விழிநீர் பாயத் திறல்செயிலக் குமனனேச்சீக் கிரம்போ வென்றாள் (கஎ)

தடுத்துரைத்தான் கொடுமைமொழி புகன்று ளப்பாற் றமையனிருந் திடமிடந்தான் றேடிச் சென்று, னடுத்துநின்ற விராவணனன் சந்நியாசி வேட மதுகொண்டு வந்துபிட்சை யருந்தக் கேட்டா, னெடுத்தனன்பின் றன்னுருவ மிராமா வென்றே ளென்செய்வா ளவன்பற்றி யெடுத்துத் தேரை, விடுத்தனன்றென் னிலங்கையதில் விரைவிற் செல்ல வெய்துயிர்த்தா டவினையை வெல்வார் யாரே. ()

அரக்கன்மடி யினிலிருந்து வருந்திச் சீதை யழுதகுரற சடாயுசெவிக் கனலிற் செம்பை, யுருக்கிவிட்ட தெனக்கேட்ப துணர்ந்து தன்கண் ணெழுகனலிற் சிவந்திடத்தே ரோடா வண்ணம், பருப்பதம்போ னின்றுதடுத் தான்ப ரந்த பாவிநதித் திரமதிற் பாவி தள்ளிச், செருக்கிநொடு பெண்ணைநெடுங் கரையிற் சேர்ந்தான் சீற்றமிகக் கொத்திமுடிச் சிதறச் செய்தான் (கக)

வாம்பரித்தேர் வண்டில்பொடி பட்ட தோங்கு மணிக்குடையின் றலைகீழாய் விழுந்து மண்மே, லாம்பிகவிழ்ந் திருந்ததெனக் கிடந்த தம்மா வடல்கிளர்சா ரதியுமிறந் தனன்வில் லம்பு, தூம்புபடு துணியுந்தூ ளாகச் செய்தான் சுழன்றெழுந்து சிறகைவிரித் தடித்தான் றூயா, டேம்பியழு திடப்பதகன் றரையில் விட்டுச் சிறகுகா லிரண்டுமறுத் தெறிந்தான் மாதோ. (சO)

கொடியகணை கழுத்துருவி யோட விட்டான் குண்டலமம்போற் சடாயுவிழுந் தனன்கோ தண்ட, நெடியவன்றன் னருந்ததிக்கற் பனையா டன்னை நீண்டகரத் தாலெடுத்தோர் நிமிடப் போதின்,

மடியில்வைத்து விரைந்தெழுந்தா காச மார்க்க மாகவிலங் கைகை யணைந்து வளர சோக, வடிநிழலின் வைத்தனன்மேற் பறவை வேந் தற் கடுத்ததம்ப ரீடணுக்காங் குரைப்ப தானுன். (௬௧)

வேறு.

சிந்தை தளர்ந்து சீதைதனைத் தேடி யிராம னிலக்குமணனை வந்து பாலி நீங்கடந்து மணிநீர்ச் சுனைகள் பரந்திருந்த, கந்த வரை யில் வாம்பரித்தேர் கணைவில் லொடிந்து படுகளம்போன், றிந்த வித மவீழ்ந் திருந்தனகண் டிறகு சிதைபட் டனுங்கண்டார். (௬௨)

ஒழுக வுதிர முயிர்த்துடலி னுயிருண் டில்லை யெனக்கிடந்த, கழுகி னுருவங் கண்டிவனே காலன் வேட மாறிவந்து, கொழுநி வரிவண் டாற்றுநெடுங் கூந்தற் சீதை தனைப்பிடித்தே, முழுதுந் தின்று ளிவனுயிரை முடிப்ப னென்று கணைதொடுத்தான். (௬௩)

அன்ன வேலைத் தசரதனுக் கிளையோ னியானென் றுரைத்த தற்கு, முன்ன நடந்த செயலனைத்து மொழிந்து சீதை தனையிலங் கை, மன்னுங் கொடிய விராவணன்றன் மடியி லெடுத்து வைத்து வந்தா, னின்னல் கூறப் பொருதிவீழ்ந் தேனென் றிவையும் புகன் றனுல்: (௬௪)

வேறு.

அன்னால் வாய்மை மொழிசெவிப் புகுத வன்புமீ தூர்ந்துள முருகி, யுன்னுயிர் விடுஞான் றுற்றதான் மனத்தி னொருசிறு துயரமு நிலேயேன், முன்னேநீ பூசை புரிந்திடும் வயித்திய நாதமா நகர்தனின் முதன்மை, மன்னிய சித்தா முதவட பாலின் வயித்திய நாதன்வாழ் தென்பால். (௬௫)

அற்புத மான வியூதிகுண் டத்திற் கணித்துநற் சிதைதனையடுக்கிப், பொற்புவாய்ந் திடுமுத் தாக்கினி யையினைப் புரிகுவ னென்ற

ன்ன் பூமி, யிற்குறை காலைப் பரப்பியே தலையைத் தொங்கவிட் டிற ந்தனன் சடாயு, மற்புய வலிமை யுடையவ னெடுத்து வந்துபின் னம்முறை செய்தான். (சகூ)

குலவிய மகிமைப் புகழ்பல படைத்துக் குணங்குடி யிருந்திடு மீரே, மூலகுபோற் றிடுஞ்சித் தாமுதப் புனலின் மூழ்கியுத் தரக்கிரி யையிலே, நலமுறச் செய்த விராமன்வெள் ளெருக்கி னிழலி னற் பிதிர் பிண்ட, மிலகுதர்ப் பணமும் வேதநன் யுறுவா றெழில்பெற வியற்றினன் மாதோ. (சஎ)

ஆனைய நியமஞ் செய்துமுடித் தரவு மதியுந் தண்புனலும் புனையும் வயித்திய நாதனடி பணிந்தன் புருவா கிப்பூசைத் தனையாய்ந் தரிய வேதவிதி தவறு திலக்கு மணனோடு [தான் கினையு மவைதாம் பெறவியற்றி செயிங்கா னகத்தென் றிசைபோ

வேறு.

இலங்கெழிற்சீ தையைத்தேடி நடந்திராம னினியதிரு வணை யியற்றி யிலங்கை சேர்ந்து, வலன்கொள்கணை தொடுத்திரா வண னைக் கொன்று வந்தடுத்த வீபூடணனுக் கிலங்கை வாழு, நலன்கொ ண்முடி சூட்டியருந் ததிக்குக் கற்பு நல்கியிடுஞ் சீதையுடன் விமான மேறிக், கலந்துரிமை யிருமிலக்கு மணன்பின் சூழக் கனகமதி லயோத்திசென்று காதல் கூர்ந்தான். (சக)

வேறு.

அற்க ளத்திறை தன்னை யருச்சனை
பொற்பு றச்செய் சடாயு புகழ்த்திற

டற்ச ருக்க நவின்றனன் காலவன்
சொற்றி றங்கொள் சருக்கமேற் சொல்லுவேன். (௫0

சடாயுவருச்சனைசெய்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧0௧௪.

---

# காலவச்சருக்கம்

நீலமே னியன்றனை நிதமும் போற்றிடுங்
காலவ னெனும்பெய ரிருடி காதையைச்
சாலவே சூதமா முனிவன் றண்மைசேர்
சீலமா முனிவரர்க் குரைத்தல் செய்தனன்.

விழுமிய கேள்வியான் மேன்மை பெற்றிடு
மெழுபது சீடர்க ளுடனி ருந்தனன்
வழுவறச் சந்திவந் தனமி யற்றினன்
பொழுதுவீண் போக்குவ திலன்பு கன்றிடன்.

இனையவன் றலங்கள்சஞ் சரித்தற் கெண்ணியே
புனைநலம் பெற்றகா விரிப்பு துப்புன
றனைவலஞ் செய்தமுழ் கினன்பின் சார்ந்திடும்
வினையொழி சந்தரபுட் கரிணி மேவியே.

தோய்ந்தன னரங்கநற் றனைப்ப தாம்புய
மேய்ந்திடும் படிதுதித் திறைஞ்சிப் போந்தனன்
வாய்ந்தசீர் முட்டமா நகர மாதியாப்
பாய்ந்திடு நதித்திருப் பதிநூற் றெட்டுமே.

ஆங்குள தீர்த்தநீ ராடி வண்டுழாய்
பாங்குறத் தரித்திடு முகுந்த னைப்பணிந்

தோங்கிய காதன்மீ தூரப் போற்றியே
ஈங்குமென் மகேந்திரப் பொருப்பி னின்றனன (௫)

வேங்கையின் றேல்விரிக திருந்து வேங்கட
வோங்கிய கிரிக்குநே ரொன்று மில்லையென்
றுங்கவ னினைந்துத புதிய செப்பயிற்
பாகுரு புனரிபே பரிவ முழ்கினான். (௬)

மத்தியா னந்தனில் வளரும் வேங்கடத்
தத்தம சுவாமிபுட் கரிணி யொன்புனற
சித்தநன் மகிழ்பெறத் தோய்ந்து செவ்விசேர்
பத்தியால் வேங்கட நாதன் பாதமேல். (௭)

மருக்கமழ் பைந்துழா யணிந்து வந்துபின்
விருப்புறு மகேந்திர கிரியை மேவியே
திருப்பொலி செயன்முறை விசுவ தேவமு.
மருத்திமே லறுசுவை யடிசி லுண்டனன். (௮)

தரணிமேற் றிசைபுகுஞ் சாயங் காலயி
லரன்மலி மதுரநா யகனை யன்பிறை
பரவின னீங்கிதிற் பழுது வந்திடின்
விரவுதீ யினிலுயிர் விடுவ னென்றனன். (௯)

இம்முறை யாயிரம் வருட மெய்துஞான்
றம்மறை யிருடிசே தூவினி லாய்புனற்
செம்மையா யாடிமேற் சித்த பாதுகை
யிம்முறை போறியுத் தரத்தின் மேயினான். (௧௦)

செல்லுழி யுப்பயகா விரியின் றீரமேன்
மல்கும்வெள் ளெருக்குசல் வனத்தின் பாங்கரி
னெல்லைமி னடந்தன னெழுந்தி ராக்கதன்
கொல்லவந் தவனெனக் கொதித்து நின்றனன் (கக)

நாதனே யெனாசர சிங்க மந்திர
மோதியொண் புனலெடுத் திறைப்ப வுக்கிரஞ்
சாதக மாகியவ் விருடி தான்மிசைக்
காதக விராக்கதன் கனிந்தி றைஞ்சினான். (கஉ)

இறைகட் டுலகிலிவ் வுருவம் வந்தது
புரையிறப் பகரெனப் பூரு வந்தனி
துரைபெறு துந்திவ னெனவு ரைப்பரென்
வரையறை பெறும்பெயர் வாய்மை யென்றனன் (கங)

மல்லிகார்ச் சுனமகா தேவன் முன்னரி
னெல்லிகா ணருஞ்சிவ நிசியி னோர்பெறு
செல்வமா மறையவன் சிவபு ராணநூல்
சொல்லுமா யிடைப்பல தூட ணஞ்செய்தேன். (கச)

கந்தரு வீக்குலத் துதித்துக் கானநூல்
வந்ததாற் பாடினேன் மறைவ லோரெலாஞ்
சிந்தைகூர்ந் ததிசயித் தனர்சி வந்தவ
னொந்துவெஞ் சாபமோர் நொடியிற் கூறினான் (கரு)

அகந்தைசெய் யரக்கனா யைந்து சன்மநீ
சகந்தனி லெடுத்திடத் தக்க தென்றன
னிகழ்ந்துசீர்ப் புராணநூ லினைப்ப டித்தலாற்
புகன்றது பலித்தது புனித வென்றனன். (கசா)

வேறு.

மசனறபின் னுன்கு சென்மஞ் சிவநிசி யதனி னுதன்
றன்றரி சனத்தா லேர்தாஞ் சனனமீ வயித்திய நாதன்
வென்றிசேர் தலத்த ரக்க னுருவினை யெடுத்து வேதம்
நன்றறிந் திலகு கால வனைப்பிடித் திடக டப்பாய்.

அன்னவன் மறுவொன் றேற்றி யரும்புன றெளிப்பான் பின்ன
ரின்னவல் லுருவ நீங்கி யிடுமெனப் புராண வாய்மை
நன்னெறி யறிந்து கூறும் வேதிய னவின்று னன்றேன்
சொன்னவப் படிச னித்துத் தொடர்ந்தன னென்று னம்மா. (௧௮)

அருட்கிட னுன வுன்கை யரும்புனற் பட்ட போதே
யிருட்பொலி பாவ நீங்கிற் றிலகுகந் தருவலோகம்
பொருக்கெனச் செல்வனென்று புகன்றுபொற் புறம்வி மானந்
திருத்தக வேறித் தெய்வக் குழாம்புடை சூழச் சென்றுன். (௧௯)

வேறு.

மங்களவேங் கடநாதன் றரிசனத்தில் விகாரம்வந் ததனுல்வெ
ய்ய, வங்கியின்மூழ் குவனென்று சீடர்தமை யழன்மூட்டு மென்று
னன்றே, ரெங்கள்குலக் குருவேநின் றனைநீங்கி யாங்களெவ்வா
றிருப்போ மென்றே, செங்கைவிரித் தெமையிரட்சிப் பதுசேவை
யன்றேயென் றுரைத்தல் செய்தார். (௨௦)

அரிசகிப்பன் பூசாவிச் சதிவர்தா லன்பருக்கென் றருளுன் முன்
னர், தெரியவுணர்த் தினையதனைச் சிந்தையில்லை வைத் தியம்பினமென்
றிரங்கித் தேம்பும், பரிவுடையோர் தமைப்பார்த்துக் காலவனீ ரீத
யுத்தப் படியா மென்றே, யுரிமையுறப் புகன்றிடுத றவிர்த்தங்கி
மூட்டுமென வுரைத்தான் மாதோ. (௨௧)

என்செய்வா ரதன்பினெரி யழன்மூட்டி வைத்தனர்கா லவனெ ழுந்து, தன்செய்கை யுறுதிமுறை மனுவோதி யங்கியின்மூழ் கினன் று மாமன், மின்செய்சிற் றிடையுபய நாச்சியா ரிமையோர்கள் விரைந்து செல்லப், பொன்செய்பாம் பணைநீங்கி யவனெதிர்கார்த் திகைப்பருவம் போந்தான் மாயன். (உஉ)

மன்னும்வுயித் தியநாதன் றனக்கிலகும் வாயுதிசை யதனின் வந்து, நன்மைமிகு காலவனுக் கெதிர்நின்று நளினமலர்க் கரம்பி டித்தாச், அன்னும்வனக் கனனிக்கி யெடுத்துவரங் கேளென்றுன் றுயரந் தீர்ந்தீ, பன்முறைகா லவனன்னோன் றனைப்பணிந்து பரிந்து துதி செய்தான் பாங்கால். (உ௩)

இனையுதலந் தனிலைய நீயிருத்தல் வேண்டும்பே ரின்ப வீடு, தனையளிக்கு மாதலினூற் றலவாசம் யான்செய்வரந் தருதல் வேண் டும், புனையுநறும் பசுந்துளப வேங்கடநா யகவென்று புகன்று னன்னோ, னனையபடி வேண்டும்வர மனைத்துமளித் தரனடங்கா மகிழ்ச்சி கூர்ந்தான். (உ௪)

வரங்கொடுத்த வாய்மையினூல் வரதவேங் கடநாத னெனவா னோரு, மிரங்குகருங் கடலுடுத்த பூவுலகந் தனிலுள்ளோ ரேனை யோருங், கரங்குவித்துத் துதிசெய்தார் காலவனுக் கருண்முகுந்தன் கமலபாதம், பரிந்துபணிந் தவரிட்ட காமியம்யா வையும்பெறுவார் பலநாள் வாழ்வார். (உ௫)

வேறு.

கருத்த மைந்திடு காலவ னாரணன்
திருபப தாமபுயம் பூசைநி தஞ்செய்து
மருத்து ழாயணி வள்ளலவை குந்தம்வாழ்ந்
திருக்கு நகதி யின்பமேற் பெற்றனன். (உ௬)

தெளிவு பெற்றிடு மிடர்கள் யாவரு
நளின மங்கைநா யகன்பா தமேற்
றளிர்ப சுந்துழாய் சாத்திய கங்குளிர்ந்
தெளிதின் வைகுந்த மெய்தியின் புற்றனர். (உ.எ)

வேறு.

மத்த நற்று ழாயணி வள்ள லைத்தொழும்
பத்திகூர் காலவன் பண்பு கூறினே
னுத்தம மானநல் லுறுதி வாய்ந்திடு
சித்திர கேதுவின் செய்கை சொல்வன்மேல். (உ அ)

காலவச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கoசஉ.

## சித்திரகேதுச்சருக்கம்.

இனிதின்மூ வாறு புராணநன் குணர்ந்தே யெடுத்திதம் பெறப்பகர்
முனிவரன் சவுன காதிமா முனிவர் முகமலர்ந் தகமகிழ் கூரப் [குந்
புனிதன்வாழ் தெய்வ நாயகன் வயித்திய நாதனற் பொற்புறு சரிதந்
தனிலொரு காதை யற்புத மாகத் தரும்படி யுரைத்தன்மே யினனால்.

வேறு.

தயங்குசவ் வீர தேசந் தனைப்புரந் தளிப்போன் மேலாஞ்
செயம்பெறு சித்திர கேது திகழவன் மனைவி கற்பு
வியந்தறி வரிய மேன்மை விளங்குமே மாங்கி யன்னோ
னயந்தரும் புதல்வ னின்றி நாடொறும் விசார முற்றான். (உ)

எண்ணினன் சிவனை மாலை யிந்திரன் முதல்வா னோரை
நண்ணும்வே தியரை முன்னம் பூசனை நயந்து செய்தேன்
றிண்ணிய கொடுங்கோ லோச்சித் திரிந்ததாற் சேர்ந்த தென்னை
புண்ணியப் புதல்வற் பேறு கிடைத்திடாப் புன்மையென்றே. (௩)

இம்முறை யிரங்கு போதிற் காற்கிய முனிவ னென்போன்
செம்மைசேர் சித்திர கேது திருத்தகு மனையிற் போந்தான்
கொம்மென வெழுந்து வேந்த னருக்கியங் கொடுத்துப் போற்றி
விம்மிமெய் துயிர்த்தி ருந்தான் வினவினேன் முனிவன் மாதோ. (௫)

மனத்துறு கிலேசந் தன்னை வகுத்துரை யென்று வேந்தன்
றனக்கிதம் பெறந யந்து கூறின னதன்பின் றக்கோ
னினைத்தினன் மனைவி பெற்றோ யென்குறை புதல்வ னில்லை
யெனக்கு மேவு முரைப்ப தென்னென் றிம்மொழி நிகழ்த்தல் செய்தான்

வேறு.

அரசனுங் குறைப்ப வுணர்ந்திடு முனிவ னகங்குளிர்ந் தெடுத்து ரை செய்தான், புரவல புதல்வற் பேறுனக் கில்லாக் காரணம் புகலுவன் முன்னாம், விரவுநல் வளஞ்சேர் கலிங்கதே சத்தின் வேந்தனா யாகவிற் றிருந்தாய், திரமுற வேத முணர்ந்தவே தியன்றன் சிவநிசிப் பூசையை யிகழ்ந்தாய். (௬)

அன்றவன் பூசைத் திரவிய மதனி லனிந்திடு பழத்தினை யெடுத்துத், தின்றனை யப்பால் வேறிடந் தன்னிற் சிவநிசிப் பூசையை முடித்தான், மன்றலிப் புவியிற் சிறிதுநா ளிருந்தே மரித்தனை யியற்றிய பாவ, மொன்றியே புதல்வற் பேறுனக் கில்லா துளந்துயர் கூர்ந்திருந் தனையே. (௭)

உனக்குநல் லுறுதி யுபயசா விரியி னுப்பணி லொருதல முளது, மனத்துயர் தீர்க்கு மாயிடை வரத வேங்கட நாதனை வணங்கித், தனக்கிணை யில்லாத் தையலே வயித்திய நாதனைப் பணியின்மேன் மேன்று, தினத்தினிற் புதல்வற் பேறுதான் கிடைக்கும் வகைவட மலையவன் செய்வான் (௮)

னுத்தமன் வீரசே னன்ற னுண்மைசேர்
சுத்தமாஞ் சருக்கமே லெடுத்துச் சொல்லுவேன். (௧௬)

சித்திரகேதுச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௦௫௫.

## வீரசேனச்சருக்கம்.

சாருநல்வளந் தழைத்து நாடொறுஞ்
சீர்திகழ் வாலிய தேச மன்னவன்
கார்நிகர் வண்ணமசேர் கரத்தி னன்புக
ழார்சொலற் பாலரெண் ணரிய தாகுமே. (௧)

விளங்கிடு மவன்பெயர் வீர சேனன்வா
ழிளங்குமானவிழைத் திகப ரம்பெற
வளர்ந்திடும் விரதகன் கியற்றி மாண்மிய
மளந்தறி தருஞ்சிவ புராணங் கேட்டனன். (௨)

உரைத்திடு புராணிக ருளம கிழ்ந்திட
விரத்தின மிழைத்தவா பரணம் யாவையும்
வரைப்புய மன்னவ னளித்து வண்மைசேர்
தரைக்கண்வீற் றிருக்கவா சனமுந் தந்தனன். (௩)

தாழ்ந்திடு புவிதனிற் றுனி ருந்தன
னாழ்ந்திடு புராணநற் கதைய னைத்தையும்
வாழ்ந்திட வுண்ருநாண் மவுன நீங்கியே
சூழ்ந்தபே ருடன்பல சொல்வ ழங்கினன். (௪)

இனையமன் னவன்றனக் கிதம ளித்திடுந்
தனயன்வந் துதித்தனன் றகுதி பெற்றநற்
றினமதிற் சித்திர சேன னென்றுபே
ரனைவரு முரைத்திட விட்ட ழைத்தனன. (ரு)

அப்புதல் வன்றனக் கீரெட் டாண்டினிற்
செப்பரும் புகழ்சவு ராட்ட தேசம்வாழ்ந்
தப்புவிக் கிதஞ்செய்மன் னவன ளித்திடு
மைப்புயற் கூந்தலா டனைம ணஞ்செய்தான் (சு)

இருபதாண் டினிற்சய ரோக மெய்திமேற்
பெருகியை யைந்திலென் பெழுந்தி யாக்கையைக்
கருகிடச் செய்துமேற் கனத்த தாதலா
லருமையாம் வயித்திய மனைத்துஞ் செய்தனன்.

நலிவுசெய் ததுதனை நாடி மன்னவன்
மெலியுநுண் ணிடையுடன் விதன மீதுறப்
பொலிவிழந் தெண்ணிடும் பொழுத ருந்தவ
மலிகவு தமமுனி வரன்வந் துற்றனன். (அ)

அருக்கிய முதலிய வளித்து மன்னவன்
விருப்புறு முகமனும் விளம்பிப் புத்திர
னிருக்குமந் நிலைமையு மெடுத்துக் கூறினன்
றிருக்கிளர் முனிவரன் றியானஞ் செய்துமேல். (கூ)

மன்னகேள் சிவகதை மகிழ்ந்து கேட்பவர்
பின்னொரு வர்களுடன் பேசி டாரதை
யுன்முக மாகவே யுணர்வர் நீமுன
மன்னிய ருடன்பல பேசிக் கேட்டதால். (கo)

இத்தகு நோய்தொடர்ந் தெய்திற் றீதிலா
வத்தன்மான் மியந்தனைக் கேட்கு மாயிடைச்
சித்தம்வே றுகவே,சிலசொற் சொல்பவன்
புத்திரன் கையியா தியைப்பொ ருந்துவான். (கக)

ஈதலா துயர்ந்தவா சனத்தி ருந்துமே
றுதன்ற் புராணநூல் கேட்கு நன்மையில்
பார்த்தக மிரவுரவம் பதிய மூழ்கினுஞ்
சாதகம் பெறநெடுங் காலந் தான்செலும். (கஉ)

புகன்றிடு புராணநின் தனைசெய் புல்லறி
வகுந்தையர் புத்திர கீன ராகுவா
ரிகழ்ந்திடக் கயவியா தியும்வந் தெய்திடு
நிகழ்ந்தறி ரிழிவெனு நோய்நி ரம்புமே. (கந)

விடையுகந் தவன்றல புராண மேன்மைநன்
னடைபெறக் கேட்பவர் நடுவெ ழுந்திடி
னடைகுவர் குன்மநோ யன்றிக் குட்டமுந்
தடைபடா தெய்திடுந் தளர்ந்து வாடுவார். (கச)

திகைப்பொழுத் திடுஞ்சிவ புராணங் கேட்டுமே
னகைப்பவ ரிரவ்ரவ நரகஞ் சேர்குவார்
வகைத்திறம் விளங்கவா சித்த் பேர்க்குநற்
றொகைப்பொரு ளளித்திடார் நரகிற் றோய்குவார். (கரு)

வண்மைமசேர் புராணமான் மியம்வ குத்தெடுத்
துண்மையாய்ப் புகன்றவர்க் குபர்பெ ரும்பொரு
ணுண்ணிழை யாடைநல் கிடார்க ணைந்துதன்
கண்ணிழந் தருநர கழுந்தி யேங்குவார். (கசா)

இட்டகா மியந்தரு மெழிற்புள் ளரசினிற்
றிட்டமாஞ் சடாயுகுண் டத்தி னுக்குநற்
பிட்டதி ரசம்வடை பிறங்கு மோதக
மட்டிலா நிவேதன மமிழ்ந்து செய்தனன். (௨௩)

வேறு.

மிக்கபுகழ் படைத்தோங்கு சடாயு குண்ட வேதிகைநற் பசும்
பொன்னலைத் திழைத்து மென்மை, நக்கவெ மணிகுயிற்றி யதன்
வெண் ணீறு தனையணிந்து பின்னர்த்தன் புதல்வன் பாரி, தொக்க
பரி சனஞ்சூழ நின்று வேந்தன் றொல்புகழ்சேர் தேசமதிற் பாதி
தாய, செக்கர்நிற மொளிர்வயித்திய நாதற் கீந்து திருவருள்பெற்
றெழிற்கொடிஞ்சித் தேர்மேற் போந்தான். (௨௪)

பெருமைபெறு பிரதோட காலந் தன்னிற் பிறங்குசெவ்வாய
கிழமையினிற் பிதிர்க்கள் ஞான்றி, னருமைமிகு சடாயுகுண்டத் தில
ரும் வெண்ணீ றணிந்தால்வெண் குட்டமுத லனைத்துந் தீர்வார்,
பொருந்திடும் பகைவர்தமை வெல்வர் விட்டுப் போகேனென்
றுரைத்திடும்பேய் பூத மோடுங், கருதியிடு மிட்டகா மியங்க ளெல்
லாங் கைகண்ட பலனுறுங் கடல்சூழ் பார்மேல். (௨௫)

வேறு.

கிளர்ந்திடு முலக மீதிற் கெழுமுசெங் கோல்செ லுத்தி
யளந்துக்கன் டெடுத்துக் கூற வரியவன் புகழ்ப டைத்து
வளம்பெறு வீர சேன மான்மியச் சருக்க வாய்மை
விளம்பின னிப்பாற் சில விருத்தநற் சருக்கஞ் சொல்வேன். (௨௬)

வீரசேனச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௦௮௧.

---

## சீலவிருத்தச்சருக்கம்.

குற்றநீத் திலகிய குணமி குந்திடு
நற்றவ மியற்றுநன் முனிவ னாரதன்
பெற்றிசேர் கதைபிறி துரைத்த தன்றியே
மற்றுமோர் கதைவகுத் துரைத்தன் மேயினான். (௧)

வெயில்விரி பசும்பொன்வாய்க் கிலகி விண்டொடு
மெயிலுடுத் தெண்ணரும் புகழ்த மைத்திசை
பயில்பயி டனிசி தேசம் பார்ப்பனர்
மயிலிய லாரொடும் வாழ்வ தன்னதில். (௨)

குலவிய கண்ணுவ கோத்தி ரந்தழைத்
திலகிடப் பிறந்தவன் கபில னென்றுபே
ருலகுளோர் கூறுதற் குரியன் பாரிபேர்
நலமிகு சுகுணையென் றுரைப்பர் நாட்டினின். (௩)

ஏலவார் குழலெழிற் சீல விர்த்தனை
யாலமுண் டவனரு ளால ளித்தனள்
காலகா லங்களிற் கருதிச் செய்சடங்
கோலநீர்க் கடலுல குவப்பச் செய்துபின் (௪)

வேதவே தாங்கமு மோது வித்திடுங்
காதல்கூர் பருவம தகிர்ந்து கற்றுணர்
போதகா சாரியன் புத்தி ரன்றனக்
கேதநீங் கிடவளிப் பதுமி யற்றினான். (௫)

இளையவ னாழ்வசத் தியற்கை யென்கொலோ
நினைகிலன் பாவமீ தென்று நிந்தனை
தனைநிதஞ் செய்தனன் றரணி மீதினி
லனைவரும் பழித்திட மதுவ ருந்தினன். (௬)

தண்ணளி புரிந்திடுந் தாயைத் தந்தையை
யெண்ணருந் தாடணஞ் செய்தி கழ்ந்துகள்
ளுண்டுறும்வே சியர்நுக ரெச்சி லுண்டனன்
பண்ணிடுங் கொடுமையார் பகுத்துக் கூறுவார். (எ)

அன்னவ ளசேடம்பான் கொடேனை கன்றுநில்
லென்றுமப் பொழுதினும் வலிக்கெ டுத்ததைத்
தின்னுத றவிர்க்கிலன் றிருக்கு மெல்லினும்
புன்னகை செய்துபுல் லுதலொ ழிக்கிலன். (அ)

பிறங்குசேல் விழியொரு பெண்ணை யீன்றவைத்
திருந்தன ளவளுநல் விரதி யாமென
நிறங்கிளர் பருவமெய் தினளி னைப்பின்று
மறஞ்சுடு மெனல்விடுத் தவளைப் புல்லினான். (கூ)

எண்ணியென் சொல்லுவன்யா னவள்பின் னீன்றிடும்
பெண்ணையும் புணர்ந்தனன் பெரிய பாவிதான்
மண்ணினி லாதிமத் தியார்ச்சு னேசுர
வண்ணல்வீற் றிருந்திடுந் தலம டுத்தனன். (௰)

அணையநற் றலந்தனி லவன்கொ டுந்தொழி
றனையுரைப் பரிதுரா டொறுந்தன் னெஞ்சினி
னினைகுவ னிவர்மனை நிதியெ டுக்குமா
றினையதென் றிரவினிற் றிருடி யேகுவான். (கக)

விடையுகந் தேறுமவ் விமலன் றன்னரு
ளுடையவன் மறைக்குலத் துதித்து மாமறை
நடைபடா துணர்ந்தவன் சடாயு குண்டநீ
ரிடைவிடா தணிந்திட முடிந்து றங்கினன் (கஉ)

அணங்கனு டனைவிடுத் தவன்முன் போலொளித்
திணங்குரல் விரவினிற் றிருடற் கெய்தினன்
குணர்ந்தரு சடாயுகுண் டத்தி னீற்றினைப்
பணர்தொகு முடிப்பென வெடுத்துப் பார்த்தனன். (க௩)

உண்ணுறு தற் கமைபவோர் காசு மின்மையாற்
றுண்மனை யூதியே தூற்றி விட்டுமேல்
வன்மைசே ராடையைக் கவர்ந்து மாதினோ
டண்ணுமுன் னமன்கணம் வரவி றந்தனன். (க௪)

சிவகணா யியமதூ தரைச்செ யிர்த்தடர்ந்
திவர்முன நீவிர்வந் திடுவ தென்கொலென்
றவர்தமை விலக்கிமுன் னுறு நீறது
தவபியன் னவனுட றன்னின் வீழ்ந்தது. (க௫)

கண்டிலீர் போலுமென் றுரைத்துக் கண்ணின்முன்
விண்டொடும் விமானமே லேற்றி மேவினு
ரெண்டிசை புகழ்ந்திடு சடாயு வின்னெழிற்
குண்டநீ றணிபலன் கூறற் பாலதோ. (க௬)

வேறு.

இகழுஞ் சீல விருத்தன் றிருத்தமாம்
புகழ்கொள் வாய்மைச் சருக்கம் புகன்றன
னிகழ்சு வாசினி மான்மிய நீணில
மகிழும் வண்ண மெடுத்து வகுப்பன்மேல். (க௭)

சீலவிருத்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௦௯௮.

ந்தன ளுண்டிநித் திரையோர், தினையள வேனு மின்றியே பித்தர் செய்கையை யெய்தின ளப்பாற், புனையிழை தன்னை யிருடியாச் சிரமம் புகச்செய்து போந்தனர் தாமும். (ரு)

மெல்லிய றன்னை மணம்புரிந் தவனும் விருப்புறு மன்னையும் பிதாவு, நல்லமா முனிவ ரிடத்திலோர் மாத நான்குமா தம்மொரு வருடஞ், செல்லுநா ளளவும் விதிமுறை வாசஞ் செய்தனர் வேறு வே ருக, வொல்லையி லிவர்க ளிணைவறிந் தொருபாழ்ங் கிணற் றினிற் றள்ளினின் றொளித்தே. (சு)

அலகைக ளிருந்த வதன்பின்மூ வருங்கா ளுதுபோய்த் தேடி யே பார்த்து, * நிலவரங் கண்டு வெய்துயிர்த் தெடுத்து நின்றனர் மூப்பது வருடஞ், செலவரி திதன்முன் செய்தபுண் ணியத்தாற் சேர்ந்தனர் வெள்ளொருக் கிலகி, நலமிக வளிக்கும் வனத்திலப் பொழுதி னடுங்கியே நின்றன புறம்பின். (எ)

கன்னுவ முனிவ ளுச்சிர மத்தின் கடைப்படு வடதிசை யதனி, னெண்ணமுங் குலைந்தே யவையெலா மேங்கி நின்றபின் கனங்குழைப் பதியை, வண்மைசே ரொழுக்க முறைமையாற் றொழுது வணங்கின ளதிசயித் தம்மா, பெண்ணணங் கவளை யீன்றவ ரிருந்த பெரியவே தியர்பதம் பணிந்து. (அ)

கேட்டனர் தலத்தின் மகிமையை மறையோர் கெழுமுசித்தா மூத தீர்த்தம், வாட்டடங் கண்ணுண் முழுகிடச் செய்ம்மின் வலி மைசேர் பசாசனு காது, நாட்டமூன் றுடைய வயித்திய நாத னற் பதம் பணியுமப் பொழுதி, னீட்டுநல் வினையா லிகபரம் வேண்டும் யாவையு மளித்திடு மென்றார். (கூ)

---

* நிலவரம் - கிணறு.

திலகநான் முறையோருரைத்தவப் படியே தீர்த்தநீ ராடிடச் செய்து, நலமிகும் வில்வக் கிளையினால் வயித்திய நாதனை யருச்சனை புரிய, விலகுதாய் தந்தை செய்தன ரனைக்கு மியற்றியே வலம்வரும் பொழுதிற், சொலமகி ழளிக்குஞ் சடாயுகுண் டத்தின் றாயநீ றள்ளியே யணிந்தாள். (௪0)

ஆரமு தனைய வணங்கிவட் கடுத்த வலகைநோ யன்றியே யச்சோ, கோரமாம் வினைக ளியாவையு நீங்கிக் குலவுபே ரின்பமெய் தினர்தஞ், சீரணி விளக்கந் தோன்றிட நின்று டிகழ்ந்திடு மனையகுண டத்தின், காரண முணர்ந்து மூவரு மெண்ணிக் கரைபெறு மகிழ்ச்சியைப் பெற்றார். (௪௧)

காரதுவித் திலக மூவலஞ் செய்து காசினி யதனின்மே லான, வரந்தரும் வயித்திய நாதனை வணங்கி வாழுமூ ரெய்தின ரதனாற், புரந்தரன் முதலாங் கடவுளர் போற்றும் பொற்புறு சுடாயுகுண் டத்தின், திரம்பெறு மகிமை யரிதரி தென்றே செப்பினனாரத முனிவன். (௪௨)

வேறு.

தூய வாய்மைச் சுவாசினி வண்மையை
யேயு மாறு வகுத்தெடுத் தோதினே
னுயும் வண்புக ழான்றதுச் சீலனண்
பாயி லங்கு சருக்கம் பகர்வன்மேல். (௪௩)

சுவாசினிச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௧௧௧.

## துச்சீலச்சருக்கம்.

திருந்துகாம் பிலிய மென்னுந் தேசம்வாழ் மறையோன் வேதயி
ருந்ததுச் சீல னென்போன் மத்தநாண் மலர்சேர் பித்த

னரும்பலன் கொடுப்ப தென்னென் றனேகமா ரிந்தை பேசி
யிருந்தனன் சோரன் வீட்டிற் பொருள்கவர்ந் தெழிற்றீ யிட்டான்.

ஆரிய ரன்றிச் சுற்றத் தார்களு மவனைத் தள்ளிப்
பூரியா போவென் றூரின் புறத்தினில் விடுத்தா ரன்னோன்
பாரிபுத் திரர்பின் போதப் பற்பல வூர்க டோறு
மோரியை பொத்துக் கூப்பிட் டோடியே திரிந்தி ரந்தான். (உ)

வழிதனி லிடிவி ழுந்து மாய்ந்தனள் பாரி யன்றே
னழியுமுன் மைந்தன் கூட விழுந்திறந் தனனொ ழிந்து
செழியகா னகத்திற் சின்னா டிரிந்தன னதன்பின் செவ்வி
பொழிதரும் வயித்திய நாதம் போந்துபூங் கோயில் சேர்ந்தான்.()

சிலபகல் சென்ற பின்பு திருந்துமஞ் சனமெ டுக்கு
மிலகிய பணிதான் செய்தே யிருந்தன னவனைத் தூய
நலமிகு மெதிவ யிற்றி னேய்நலி குன்ப முள்ளான்
குலவுபுண் ணியவி பூதி குண்டநீ றிடுக வென்றான். (ச)

செவியினிற் கேளான் போன்றே யிருந்துபின் றேடிப் பார்த்துப்
புவியினின் மருந்து வாங்கித் தின்றிடிற் போமெ டுத்துக்
குவியுமிச் சாம்ப லுன்றன் கொடியநோய் தீர்ப்ப தில்லை
விவிதமாம் பணம்ப றிக்க வேண்டியே வைத்தா ரென்றான். (ரு)

ஆங்கிகழ்ந் தெடுத்து ரைக்கு மம்மொழி யுணர்ந்து நின்று
தாங்கருங் கோபந் தன்னாற் சபித்தனன் கண்சி வந்து
வேங்கையாய்ப் பிறப்பா யென்றே வெளியிலவ் வெதிபோ முன்ன
னீங்கின னரவந் தீண்டி யிறந்தனன் பாவி யம்மா. (சு)

துணைவினி னரகர் தன்னிற் றோய்ந்திடத் தள்ளி விட்டா
ரனையவ னரகின் வீழா தருஞ்சிவ பணிமுன் செய்த
வினைவசு மதனுன் மேன்மை விளங்கருச் சுனமா மூதூர்
தனையணைந் தடல்செ றித்த தழல்விழி யுழுவை யானுன். (எ)

தேடரு மகிமை பெற்றுத் திகழுமத் தலத்தில் வெய்ய
வேடனவ் விபூதி குண்ட நீறுமே னியின ணிந்து
காடதிற் புகுந்தான் கண்டு பிடித்ததக் கனற்கண் வேங்கை
யோடினன் குத்தித் தள்ள வொழிந்ததவ் வுருவ மன்றே. (அ)

நிறம்பொலி விபூதி குண்ட நீறுபட் டிறந்த வாற்றுற்
சிறந்திடும் விமான மேறிச் சிவகணஞ் சூழ வெள்ளிப்
பிறங்கல்வீற் றிருந்தான் மிக்க பெருமைசேர் குண்ட மேன்மை
சுறங்குநீள் கடல்சூழ் பாரிற் கணிப்பரி தன்றோ வென்றான். (௯)

இலகிய வெதிவி பூதி குண்டநீ றணிந்தி ருந்து
* கலைதைசெய் வியாதி நீங்கிக் கருணைசெய் வயித்திய நாத
னலமிகு பொற்றாள் போற்றி நவிலரு மகிழ்ச்சி கூர்ந்து
சிலபகல் வாசஞ் செய்து திருந்துமாச் சிரமஞ் சேர்ந்தான். (௧௦)

வேறு.

துலங்கும் வண்புக ழோங்குதுச் சீலனன்
னலங்கொள் வாய்மைச் சருக்க நவின்றன
னுலங்கொ டோளுதங் கன்றுயர் மான்மியப்
பலன்பு கன்ற சருக்கம் பகர்வன்மேல். (௧௧)

துச்சீலச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௧௨௨.

---

* கலைதை - கலக்கம்.

## உதங்கச்சருக்கம்.

பின்னரும் விபூதி குண்டப் பெருமையை யச் சூத னென்னு
நன்முனி யரன்பு கன்ற ஞன்மறை யுணர்ந்து நித்ய
கன்மமன் னியற்றிக் ஈமக் குரோதநீத் தண்ணல் பாதம்
பன்முறை பணிவோமன் சீடர் பரிவுகூர் தரவி ருந்தான். (க)

சற்குண மறையோன் சீட னொருவன்றாழ் கயநோ யுற்றுப்
பறபல துயரு ழந்து வருந்தியே குருவைப் பார்த்துச்
சொற்பெறு கால மூன்றுந் தெரிந்திடுந் தூயோ யிந்நோ
யற்பக லொழியா தென்னை யடுத்ததை யருள்செய் யென்றான். (உ)

வேறு.

முனபுவை சியனீ மூர்க்க னடையிகு துரோகி பூசை
யன்புடன் செய்வோர் தம்மை யகந்தையா லிகழ்ச்சி செய்தாய்
தென்புவி யாளுங் கால தூதவர் சினத்து வந்து
பின்பிடித் திழுத்து வெய்ய பெருநர கதநில் வீழ்த்தார். (ங)

ஆங்கது நீங்கி நாயாய்ப் பிறந்தனை யதன்பின் வந்து
பாங்குள மறைக்கு லத்தி லுற்பவித் தனையப் பாவத்
தோங்கின கயநோய் தீரு முபாயமொன் றுரைப்பன் கொன்றைத
தேங்கமழ் வயித்திய நாதன் செவ்விசேர் தலத்தைச் சேர்ந்து. (ச)

நிறைந்திடும் விபூதி குண்ட நீற்றினை யணிந்த போதிற்
குறைந்துநீங் கிடுமற் றென்றாற் கொடியநோய் தீரா தென்றே
யறைந்தன னனைய மேன்மைத் தலந்தனை யடுத்து வெண்ணீ
றிறைந்திடப் பத்தி நீங்கி யெடுத்தவ னுடலி விட்டான் (ரு)

அடுத்திடும் வியாதி தீரக் கண்டில னாசான் றன்னைக்
கடுத்துடல் வெளுத்த தன்றிக் காரிய மில்லை யென்று
தொடுத்தன னனேகம் வார்த்தை துகளுறு சாம்ப லென்ன
கொடுத்திடு மென்றி கழ்ந்து கொடுமொழி பின்னுஞ் சொன்னான்.

உரத்துரத் துதங்கன் கூறும் வெய்யசொற் பொறும லுள்ளத்
திரக்கமில் பாவி காக மாமுவை யென்று சாப
மறைக்கணப் பொழுதாந் தாழா திட்டன னவன்வ லாரி
புரத்தினிற் பிறந்து சோயிற் புறத்திலோர் மரத்தி ருந்தான். (எ)

உத்தம மறையோன் சித்தா முதப்புன லுதய காலம்
பத்திமீ தூர மூழ்கிப் பனிமதி யணிந்த வேணி
நித்தியன் றனைப்ப ணிந்து நிறைந்திடும் விபூதி குண்டச்
சுத்தநீ றணிந்து மீதி கொண்டுதொன் னகர்க்குச் சென்றான். (அ)

எய்தும்வே திடன்ம கிழ்ந்தே யிந்திரன் பூசை செய்த
துய்யநா தனைவ ணங்கிச் சூரிய தீர்த்தப் பாங்கர்ப்
பையவக் குண்ட நீற்றுப் பரியபொக் கணத்தை வைத்துப்
பொய்கையிற் றீர்த்த பானம் பண்ணுதற் கெழுந்து போந்தான். ()

அத்தரு பொழுதிற் காக மனையபொக் கணத்தை மூக்காற்
கொத்திடக் குண்ட நீறு பட்டதாற் கொடியாந் தேகஞ்
சுத்தமாய் நீங்கித் தேவர் சூழ்ந்திட விமான மேறி
நித்தன்வாழ் கயிலை சார்ந்து நிலைமைபெற் றிருந்தா னம்மா. (க0)

இப்படி யனேகம் வாய்மை யெய்திய விபூதி குண்ட
மெய்ப்பெரு மேன்மை தன்னை விதிவழா துறதி யாகச்
செப்பினன் புராண மூவா றுணர்ந்துளந் தெளிந்த தூயோ
னொப்பருந் தவத்தோ ரெல்லா முயர்பெரு மகிழ்ச்சி பூத்தார். (கக)

உதங்கச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககஙரு.

---

## புள்ளிருக்குவேளூர்ப்புராணம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

# பிரசித்தபத்திரம்.

இப்புராணம், பல்லவராயப்பட்டு ம-ா-ா-ஸ்ரீ, அழகப்பிள்ளையவர்கள் தந்த ஏட்டுப்பிரதியின் உதவியால் அச்சிடப்பட்டது; இந்நன்றி யாவராலும் இனிது பாராட்டற்பாலது: இப்புத்தகம் வேண்டியவர்கள் சிதம்பரம் செங்கழுநீர்ப்பிள்ளையார்கோயிற்றெரு 110-ம் நெம்பர்வீட்டில் நம்மிடத்திலும், சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை மானேஜர் ம-ா-ா-ஸ்ரீ, பொன்னுசாமிப்பிள்ளையவர்களிடத்திலும், சென்னையில் கலாரத்நாகர அச்சுக்கூடத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ, ஊ. புஷ்பரதசெட்டியாரவர்களிடத்திலும், வயித்தீசுரன்கோயிலில் மளிகைவியாபாரம் ம-ா-ா-ஸ்ரீ, முருகப்பமுதலியாரவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

விலை அணா-அ, தபாற்கூலி அணா-க.

இங்ஙனம்,

 சு. சொக்கலிங்கமுதலியார்.